*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 4, itaḻ 4*

*October 05, 1923*

Record no. 148

சிவமயம்.

சென்னைப் பதிவு எண் கறிஉக

தந்திவிலாசம்:—"[illegible]."

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

ஆசிரியன்:— ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௪. காரைக்குடி ருத்ரோத்காரி ௵ புரட்டாசி ௴ ௧௯௳ (௫—௧௦—௧௯௨௩) இதழ் ௪.

## கதரும் ராட்டும்.

கதர் என்றால் என்ன என்பது இந்நாள் எவரும் கூறித் தெரிந்து கொள்ள வேண்டிய நிலையி லில்லை. கதரென்பது "நமது நாட்டுப்பஞ்சை நமது கையினால் நமது நாட்டினத்தில் நூற்று நூலாக்கி, நமது தறியில் நெசவுசெய்யப்படும், அன்னியநாட்டுச் சம்பந்தம் சிறிதுமில்லாத ஆடை"யென்ற பொருளில் வழங்கப்படுவதை அறியாத மக்கள் எவருமிருக்க மாட்டாரென்பது திண்ணம்.

இவ்வாடை நமது நாட்டுக்கு இன்று புதிதல்ல. மேற்குநாட்டு மனிதர்கள் நூலாடையை யறியாது, கொடியையும் இலையையும் சுற்றிக்கொண்டு கானிற்றிரிந்த காலத்தில் நம்மக்கள் மெல்லிய அழகிய பருத்தி நூலாலாய உயர்ந்த ஆடைகள் தரித்து உலவினார்களென்றால், அந்நாள் ஆடையென்பதையே அறியாதார் வாழ்ந்த மேற்குநாட்டிலுள்ள மான்செஸ்டரிலும் லங்காஷையரிலுமிருந்தா நம் நாட்டிற்கு ஆடை இறக்குமதியாயது? இல்லை! இல்லை!! நம் நாட்டிலேயே செய்த ஆடை கொண்டுதான் நம்மவர் வாழ்ந்தார்கள். அக்காலத்தில் இயந்திரமும் இருந்ததாகக் காணவில்லை. கையினாலேயே, இத்தனை எண்ணுள்ள நூலென்று கணிக்கமுடியாத—கட்புலனாகாத மிக மிருதுவான நூலை நூற்றதாகச் சரித்திர வாயிலாக அறிகிறோம். அவ்வாடைதான் கதராடையே யன்றி வேறன்று. கதரென்ற பெயர் புதிதேயல்லாமல் அப் பெயர்க்குரிய பொருள் நமது நாட்டுக்கு மிகவும் பழமையானதே. இடைக் காலத்தில் நாகரிகக் கோலாகலத்தால் நமது பழமையை மறந்து மேற்கேயிருந்துவந்த பெருஞ் சுழியில் அகப்பட்டுத் தவித்தோம். அவ்வமயம் நமது பழமையை யுணர்த்தினார், கடவுள், காந்தி யுருவாக வந்து.

பழமையே யெனினும் மறந்து கிடந்த மக்கட்கு, கதர் என்றவுடன் புதுமையாகத் தோன்றிற்று. பெருமான் திருவாய்மலர்ந்தவுடனேயே உண்மையாளர் பலர் அதனைப் போற்றினார். வேறு பலர் அறியாது அலர் தூற்றினார். தூற்றிய பலரும் வரவர அதன் பெருமையை உணர்ந்து வருகிறார். அதனால் ஏற்பட்ட பிரயோஜனம் கொஞ்சமன்று. பல திறப்பட்ட ராஜீயக் கட்சியினருள்ளும் பிறகாரியங்களில் அபிப்பிராய வேற்றுமையிருந்தபோதிலும், கதரை மேற்கொள்வதில் அறிவுள்ள எவரும் பேதங் கொள்ளவில்லை. ராஜீய காரியங்களில் சம்பந்தப்படாத ஏனைப் பலரும் கதரைக் கைக்கொண் டொழுகுகின்றார்கள்.

எனவே, ஒத்துழையாமையால் உறுபயன் பெறுவதாகச் சின்னாட் கட்குமுன். பேரிரைச்சல் போட்டு எல்லாம் துறந்து சிறையும் நண்ணித் திரும்பிவந்தபின் சட்டசபை போய் முட்டுப்போட்டுச் சாதித்து விடுவதாய்ச் சாற்றி, ஒத்துழையாமையின் உண்மையை அறியாது, உலக சிரேஷ்டரின் உள்ளந் தெரியாது, ஒத்துழையாப்பேரியக்கத்தின் ஏனைப் பிரிவுகளை எந்தத் தாஸர் எவ்வாறு கொல்லினும் கதரியக்கத்தை யழிக்க எவராலும் முடியாதென்பது உறுதி.

கதர்க் கட்டவேண்டுமென்றபேரெண்ணம் மக்களிடை இந்நாள் பரவிவருவது மகிழ்ச்சி தரக்கூடிய ஒன்றுதான். ஆனால் இது கொண்டு மகிழ்ந்துவிட முடியவில்லை. கதர்க் கட்டவேண்டிய எண்ணமுதிப்பது நல்லதுதான். அவ்வெண்ணம் கொண்டுள்ள அன்பர்கட் கெல்லாம் எமது வணக்கம் உரியதாக.

அவ் வெண்ணத்தைக் கொடுத்த மக்கட்கு, அதனைத் தந்த கடவுள், கதர் உற்பத்தியில் நாட்டஞ் செலுத்தும் எண்ணத்தையும் தருவாராக. உற்பத்தியின்றேல் எங்கிருந்து கதர்க்கட்ட முடியும்? ராட்டினஞ் சுழன்றாலன்றோ கதர் மலியும்? ராட்டு எவ்வளவு சுழல்கின்றதோ அவ்வளவுதான் கதர் உற்பத்தியாகும். மூலத்தை விடுத்து அதனின்றும் கிளைக்கும் மற்றையதை விரும்பினால் எவ்வாறு கிடைக்கும்?

இந்நாள் கடைகளில் கதரென்று சொல்லி விற்கப்பெறுகின்றவைகளுள் பெரும் பகுதி மோசக் கதராகவே யிருப்பதைப் பற்பல இடங்களிலும் காண்கின்றோம். காரணமென்ன? கதர்க்கட்ட ஜனங்கள்

விரும்புகிறார்கள். போதிய அளவு உற்பத்திக் குறைவாற் கிடைக்க வில்லை. வியாபாரிகள் தங்கள் இலாபங் கருதிக் கதர் விஷயத்திலும் மோசஞ் செய்ய அஞ்சாது துணிந்துவிட்டனர். "வியாபார" மென்பது, "பஞ்ச மகாபாதகங்களில் ஒன்றாகிய பொய்க்கு நிலைக்களம்" என்று அகராதியிற் பொருளெழுதலாமென்ற நிலைக்கு வந்திருப்பதை அறியாதார் எவருமில்லை. ஆனால், இப் புண்ணியக் கதர் விஷயத்தில் அதைப்புகுத்தாதிருக்கலாம். இதைச் சொன்னால் வியாபாரிகள் எங்குக்கேட்கப் போகிறார்கள்? கடவுளுக்குப் பயந்தவர் ஒரு சில ரிருப்பரோ என்னவோ. அதுவும் ஐயமே.

இது விஷயத்தில் எவரையும் நம்ப முடியவில்லை. கதர்க் கட்டுகிறார். தேசாபிமானம் பேசுகிறார். ஆனால், செய்வது மோசம். ஒவ்வொரு ஊரிலும் புடவைக் கடைகள் தவறாது "கதர்" என்று பெரிய விளம்பரப் பலகைகள் போடப்பட்டிருக்கின்றன. தீபாவளி நெருங்கிவிட்டது. ஆதலின் ஜனங்கள் நிலையறிந்து, நாட்டைக் கொலைசெய்யுந் தொழிலென்று கருதத் தகுந்த சீமைப் புடவைகள் வியாபாரத் தொழிலை மேற்கொண்டவர்களும், இயந்திர நூலாலாய உடைகளை வைத்துக்கொண்டு கதர் என்று சொல்லி ஜனங்களை வஞ்சித்து விற்று வருகின்றனர். சீமைத்துணி வியாபாரஞ் செய்வது நாட்டை யழிப்பதாகும் என்பதை உணராதவர்கள், கதர் விஷயத்தில் ஏமாற்ற அஞ்சமாட்டார்களென்பது உறுதி. எனவே, சீமைத்துணி விற்பனை செய்யுங் கடைக்குள் உண்மைக் கதர் விரும்பும் அன்பர்கள் நுழையாதிருத்தல் நலம். இனித்தனியாகக் கதர் வியாபாரஞ் செய்வோரும் அறிந்தோ அறியாமலோ பொய்க் கதரும் விற்று வருகிறார்கள். நாம் எவரையும் எதுவும் சொல்வதற்கில்லை.

தீர்க்க தரிசியாகிய மகாத்மா இன்னோரன்ன சங்கடங்களை ஏற்கனவே உணர்ந்துதான் ஒவ்வொருவரும் தாங்களாகவே நூல் நூற்று அதனாலாய ஆடையைத் தரித்தல் வேண்டு மென்று கூறியுள்ளார். இந்த முறையைக் கைப்பற்றினாலன்றி உண்மைக் கதரென்று எதையும் நம்புவதற்கில்லை.

இந்திய இயந்திரங்களிலிருந்து போலிக்கதர் உற்பத்தி செய்யப்படுவது மல்லாமல், ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்தும் கதர்மாதிரி துணிகள் இறக்குமதி செய்யப்பட்டு கதர் என்று சொல்லி விற்கப்படுவதாகவும் வதந்தி யுலாவக் கண்டோம். உண்மையில் இந்திய ஜனங்களை யேமாற்றுங்கருத்தோடு ஜப்பான் அங்ஙனஞ் செய்திருக்குமானால், ஜப்பானில் சமீபத்தில் ஏற்பட்ட பேரழிவிற்குக் காரணம் இதுவாகத்தா னிருக்கலா மென்று திட்டமாகக் கூறலாம். இன்றேல் வேறு எத்தீங்கு காரணமோ? ஒன்று மட்டும் சொல்லுவோம். கதர் விஷயத்தில் மோசஞ் செய்யும் எவரும் உருப்பட மாட்டாரென்பது சரதம்.

அன்பர்கள் கதர்க்கட்ட எண்ணுவது மட்டும் பிரயோஜனமில்லை. பிரயோஜனமில்லை யென்றால் பழைய பாடத்தைப் படிக்கிறோமென்று சீமைத் துணியையும் சீமை நூலாலாய துணியையும் சீமை இயந்திரத்தாலாய துணியையும் கட்டப் புகுதல் ஆகுமோ? கதரெண்ணம் கைவரப்பெற்ற பின்னரும் பிற புரிதல் பெரிய பாபம்.

அதற்குச் செய்ய வேண்டுவதொன்றுண்டு. ராட்டைப் பெருக்குதல்வேண்டும். நெசவைப்பற்றிக் கவலையில்லை. நெசவுத் தொழிலோர் ஏராளமானவர்கள் இன்றும் தங்கள் தொழில் புரிந்து வருகின்றனர். அவர்களிடம் கொடுத்து நெய்யலாம். பஞ்சுக்கு யாண்டும் அலைய வேண்டுவதின்று. நமது நாட்டில் பஞ்சு எல்லையிலா வகை கிடைக்கும். நாம் செய்யவேண்டுவது ராட்டினம்சுழற்றுதல் ஒன்றுதான். ஒவ்வொருவரும் ராட்டினம் சுழற்றுதல் வேண்டும். ஒவ்வொரு பெண்ணும் ராட்டினம் சுற்றச் செய்தல்வேண்டும். பணக்காரர்கள் ஆங்காங்குள்ள ஏழைகளை யெல்லாம் ஒன்றாகச்சேர்த்துப் பெரிய இராட்டினத் தொழிற்சாலை பல கண்டு ராட்டினத்தைப் பெருக்கினாலன்றி உண்மைக்கதர் உற்பத்தியாகாது. இப்பணியை மேற்கொள்ளும் அன்பர்கட்குப் பெரும் புண்ணியமுண்டு. இதைப்பற்றி மீண்டும் எழுதுவோம்.

## கடிதம்.

வைசியகுல மணிகளே!

௧௭-௮-௨௬ ல் வெளியான ஊழியனைப்பார்வையிட்டேன். அதின் ௮-ம் பக்கத்தில் பதிக்கப் பெற்றிருப்பதும், எமது நண்பர் மு. சின்னையா சாத்திரியாரால் எழுதப்பட்டதுமாகிய வியாசத்தின் கீழ் பத்திராதிபரால் காட்டப்பட்ட குறிப்பு என்பதன் பின்னுள்ள வாக்கியங்களில், "இச்செட்டியார் நண்பர் நம்மரபிலுதித்தவரென்றே எண்ணுகிறோம்" என்பதை நோக்குமிடத்து எமக்கும் நமது சமூகத்திற்கும் ஆச்சரியத்தை விளைவிக்கக் கூடியதா யிருக்கிறது.

சுதேசமித்திரன் முதலிய சில பத்திரிகைகளில் கூறப்படும் அரிய பல விஷயங்கள் பல சமூகத்தார்க்குப் பெரும்பாலும் பொதுவாக இருத்தல்போலன்றி, தனவைசிய ஊழியன் பத்திரிகை தன் நாமத்திற்கேற்ப நம்மவர்க்குரிய விஷயங்களை உள்ளபடி விளக்குமென நினைத்தும் பத்திராதிபர் நம்மவரே என்பதை நினைத்தும் இப்பத்திரிகைக்குசந்தாதாரரான என்னை, பல நாட்களாக பத்திராதிபர் தெரிந்து பத்திரிகை அனுப்பி வந்திருந்தும் விலாசத்தாலும் பெயராலும் தம்மினத்தவ ரென்பதும் பிறவினத்தவரென்பதும் அறியாதிருப்பவர்போல எழுதியிருப்பதால், நம்மவர்களுள் இதுவரைசந்தாதாரராகச் சேர்ந்திருப்பவர்களும் இனி சந்தாதாராகச் சேருபவர்களும் கோவில் உட்பிரிவுகளாகிய பலவற்றையும் விளக்கமாகப் பத்திராதிபருக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டியதா யிருக்கிறது. அவ்வாறு தெரிவியாவிடில் எம்மைச் சந்தேகித்ததுபோல எழுதியபடி நம்மரபிலுள்ள பலரையு மெழுதிவிடுவார்.

மேலும், சந்தாதார் அனுப்பும் வியாசங்கள் தமது கொள்கைக்கு மாறுபாடாக விருப்பின் அதைப் பிரசுரஞ் செய்ய விருப்பமில்லை எனத் தெரிவிப்பதன்றிச் சந்தாதாரர்களை முறையற்ற வாக்கியங்களாற் சுட்டி எழுதுவதேனோ?

நமது பத்திராதிபர் பெருமை வாய்ந்த நம் சமூகத்தை இழிவுபட எழுதிய பல வியாசங்களையும் நம் முன்னோர்கள் வேளாண் மரபில் பெண் ணெடுத்திருப்ப தாகவே கூறப்பட்ட சரித்திரம் உண்மையேயென வைத்துக்கொள்வ தாயினும், நம்மவர்கள் சில தலைமுறை செல்லு முன்னேயே வைசியரே என்பதும் பிறவும் எழுத விருப்பமுடையேன். "செட்டியார் மரபினர் வைசியரெனவும் வேளாண் மரபினர் சூத்திரரெனவும் கொண்டு உங்கள் சரித்திரத்தில் கூறப்பட்ட மணநிகழ்ச்சியையும் நோக்கினால் இப்பொழுதுள்ள நீங்களெல்லாம் அநுலோமராகவன்றோ கருதப்படுவீர்கள்" என மு. சின்னைய சாத்திரியார் பத்திராதிபருக் கெழுதிய கடிதத்தை உற்று நோக்குமிடத்து அவரே நம்மரபினரை அநுலோமரெனக் கூறவந்தவரல்லரென்பது விளங்கும். யானும் அக் கருத்துக் கிசைந்தவனல்லன். இதைக்குறித்துப் பத்திராதிபர் தங்கருத்து முடிவில் வெளிப்படுமென எழுதியபடி அது வெளிப்பட்ட பின் மேற்காட்டிய வியாசம் என்னால் எழுதப்பெறும்.

பழ. பெரி. பெரி.

பெரியகருப்பன் செட்டியார்

நெற்குப்பை.

குறிப்பு:—இந்நண்பர் ஆவணி ௴ ௧௯ வெளிப்போந்த செய்தியைப் பார்வையிட்டு அதைப்பற்றிச் சிலவரைய இப்பொழுதேனும் முன்வந்ததற்கு நன்றிகூறுகிறோம். இவர் நம்மரபு என்பதை நாம் அறிந்து கொள்ளாததற்கு வருந்துகிறார். அதற்கு நாம் என் செய்வது? ஒவ்வொரு சந்தாதாரரைப்பற்றியசகல விஷயங்களையும்நாமறிந்துகொள்ள முடியாது. அது அவசியமுமின்று. இவர் விலாசம் பெயர்கொண்டு இவர் நம்மவரென நாம் எப்படியறிய முடியும்? "பழ. பெரி. பெரி.பெரியகருப்பன்செட்டியார்" என்று, இளவகையார் முதலிய அன்பர்கள் பெயரிடுவதில்லையென்று தீர்மானித்திருக்கிறார்கள்? முறையற்ற வார்த்தைகளால் இவரை என்ன கூறிவிட்டோமென்பதை அப்பத்திரிகையை நன்றாகப் படித்துப் பார்த்து அன்பர்களே தீர்மானித்துக் கொள்ளல் வேண்டும். இவர் நண்பரென்று கூறும் சாத்திரியார் நம்மவரை அநுலோமர் என்று உண்மையற்ற கட்டுரையொன்று எழுதித்தர, அதனை நம்மவரொருவர் நண்பருக்குப் புத்தி கூறித் தடுப்பாரேயன்றி, சிபார்சு செய்வாரா என்று உண்மையில் நாம் கொண்ட சந்தேகத்தை யெழுதினோமேயன்றி வேறன்று. அப்படியுந் தவறாக ஒன்றும் எழுதிவிடவில்லை. பிற விஷயங்களைப் பற்றி விரித்தெழுத இப்பொழுது எண்ணவில்லை. இச்சண்டையைச் சீக்கிரம் முடிக்க எண்ணியுள்ளோம். முடித்தபிறகு இது சம்பந்தமாகப் பிரசுரிக்கப்படமாட்டாது. நண்பர் ஏதேனும் இதைப் பற்றி எழுத விரும்பினாலும், அன்றி இவ்வநுலோமரின் மூலபுருஷரான இவர் நண்பர் சாத்திரியார் ஏதும் எழுதுவதாயினும் இன்னும் இரண்டு வாரங்கட்குள் எழுதியனுப்புவாராக.

ஆசிரியன்.



## நாலாயிரத் திவ்ய பிரபந்தம்.

### நாலாயிரத்தொகை விவரம்.

ஊழியன் மலர் ௩-ல் இரண்டு இதழ்களில் அவதாரிகை யென்றும் வரலாறு என்றும் இரண்டு பகுதிகள் இந்தத் தலைப்பின் கீழ் வெளிவந்திருப்பது நேயர்கட்கு நினைவிலிருக்கலாம். இந்த இதழில் பிரபந்தங்களின் விவரங்கள் என்னும் பகுதியினை யெடுத்தாராய்வாம்.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற அருளிச்செயலமுதமாகிய நாலாயிரத் திவ்யபிரபந்தங்களின் பாசுரங்களை எண்ணிப் பார்க்குமிடத்து தொகையிற் சிறிது குறைந்திருப்பினும்நாலாயிரமென்றே அழைக்கப்பெற்று வருவது பரம்பரை ஸித்தாந்தம். இது நான்காயிரமாய் ௨௪ பிரபந்தங்களாக எண்ணிக்கொள்ளப்பெற்றிருக்கிறது. இதில் முதலாயிரத்துக்குப் பத்துப் பிரபந்தங்களும், இரண்டாவதாயிரத்துக்கு மூன்று பிரபந்தங்களும், மூன்றாவதாயிரத்துக்குப் பத்துப் பிரபந்தங்களும், நான்காவதாயிரத்துக்கு ஒரு பிரபந்தமுமாகப் பிரபந்தங்கள் இருபத்து நான்கும் வகுக்கப்பெற்றிருக்கின்றன.

திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி திருப்பாவை நாச்சியார் திருமொழி பெருமாள் திருமொழி திருச்சந்தவிருத்தம் திருமாலை திருப்பள்ளியெழுச்சி அமலனாதிப்பிரான் கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் பத்தும் முதலாயிரத்துள் அடங்கியிருக்கின்றன; பெரிய திருமொழி திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் என்னும் மூன்றும் இரண்டாவதாயிரத்துள் அடங்கியிருக்கின்றன; முதல்திருவந்தாதி இரண்டாந் திருவந்தாதி மூன்றாந்திருவந்தாதி நான்முகன்திருவந்தாதி திருவிருத்தம் திருவாசிரியம் பெரியதிருவந்தாதி திருவெழுகூற்றிருக்கை சிறியதிருமடல் பெரியதிருமடல் என்னும் பத்தும் மூன்றாவதாயிரத்துள் அடங்கியிருக்கின்றன; திருவாய்மொழி என்னும் ஒன்றே நாலாவதாயிரத்துள் அடங்கியிருக்கின்றது. இவற்றுள் மூன்றாவதாயிரப் பிரபந்தங்கள் பத்தையும் இயற்பா என்றும், நாலாவதாயிரத்தைத் திருவாய்மொழி என்றும் பெரியோர் உரைத்தருள்வர்.

பிரபந்தங்களில் வரும் செய்யுளைப் பாசுரமென்றும், பத்து அல்லது பதினொரு செய்யுட்கள் கொண்டதாகிய தசகமென்னும் பதிகத்தைத் திருமொழி அல்லது திருவாய்மொழி யென்றும், பத்துப் பதிகங்கள் சேர்ந்த நூறு பாடல்களாகிய சதகத்தைப் பத்து என்றும் கூறுவது ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயம்.

**முதலாயிரத்தில்,** திருப்பல்லாண்டு ௧௨ பாசுரங்களும், பெரியாழ்வார் திருமொழி ௪௬௧ பாசுரங்களும், திருப்பாவை ௩௰ பாசுரங்களும், நாச்சியார் திருமொழி ௧௪௩ பாசுரங்களும், பெருமாள் திருமொழி ௧௦௫ பாசுரங்களும், திருச் சந்த விருத்தம் ௧௨௦ பாசுரங்களும், திருமாலை ௪௫ பாசுரங்களும், திருப்பள்ளி யெழுச்சி ௰ பாசுரங்களும், அமலனாதிப்பிரான் ௰ பாசுரங்களும், கண்ணிநுண் சிறுத்தாம்பு ௧௧ பாசுரங்களுமாக **௯௪௭ பாசுரங்கள்** அடங்கியிருக்கின்றன. **இரண்டாவதாயிரத்தில்** பெரிய திருமொழி ௧௦௮௪ பாசுரங்களும், திருக்குறுந் தாண்டகம் ௨௰ பாசுரங்களும், திருநெடுந் தாண்டகம் ௩௰ பாசுரங்களுமாக **௧௧௩௪ பாசுரங்கள்** அடங்கியிருக்கின்றன. இவற்றுள் பெரிய திருமொழியில் பத்தாம் பத்து ஏழாந் திருமொழியில் ௧௪ பாசுரங்களும் பதினோராம் பத்தில் எட்டுத் திருமொழிகளும் இருக்கின்றன வாகையால், பெரிய திருமொழிக் கணக்கு ௧௦௮௪ பாசுரங்களாயின. **மூன்றாவதாயிரத்தில் (இயற்பாவில்)** முதல் திருவந்தாதி ௧௦௦ பாசுரங்களும், இரண்டாந் திருவந்தாதி ௧௦௦ பாசுரங்களும், நான்முகன் திருவந்தாதி ௯௬ பாசுரங்களும், திருவாசிரியம் ௭ பாசுரங்களும், திருவெழுகூற்றிருக்கை சிறிய திருமடல் பெரிய திருமடல் மூன்றும் தனித்தனி ஒவ்வொன்றாக மூன்று பாசுரங்களுமாக **௫௯௩ பாசுரங்கள்** அடங்கியிருக்கின்றன. **நான்காவதாயிரமாகிய திருவாய்மொழியில் ௧௧௦௨ பாசுரங்கள்** அடங்கியிருக்கின்றன. **ஆக நான்**காயிரத்துள்ளும ௩௭௭௬ பாசுரங்களே யிருக்கின்றன. **இனி,**

[௮-ம்பக்கம் பார்க்க.]

## பிறநாட்டுச் செய்தி.

லண்டனில் சில ரஸ்தாக்கட்கு ரப்பர்த்தளம் போட்டிருக்கிறார்கள்.

* * *

நியூயார்க் நகரிலுள்ள எடெர்லா என்னும் மாது கங-வ-நிமிஷத்தில் அஅ0 கஜதூரம் நீந்தினள்.

* * *

முன்னம் இந்திய மந்திரியாக இருந்த மார்லிப் பிரபு சமீபத்தில் இங்கிலாந்தில் காலஞ்சென்றனர்.

* * *

ஜர்மனியில் நல்ல மாமிசம்கிடைப்பது அருமையாய் விட்டபடியால் கடைகளில் நாய் மாமிசம் விற்று வருகிறார்கள்.

* * *

ஜப்பான் கஷ்ட நிவாரணத்திற்கென்று ருஷியா அனுப்பிய வைத்திய சாமான்களை ஜப்பான் மறுத்துத் திருப்பியனுப்பிவிட்டது.

* * *

ஜப்பான் கஷ்ட நிவாரண நிதிக்குப் பம்பாய் மாகாணத்திலிருந்து மாத்திரம்இதுவரையில் உ,க0,000 ரூபாய் வரையில்வந்திருக்கிறதாம்.

* * *

லண்டனில் எலி வியாபாரம் விசேஷமாய் நடந்தேறுகிறது. வருஷத்தில் ஒவ்வொரு வியாபாரியும் சஅ000 பவுனுக்கு வியாபாரம் செய்கின்றனர்.

* * *

பூகம்பத்தீயினால், யோகஹாமாவில் உள்ள சார்டர்ட் பாங்கில் போடப்பட்டிருந்த எஃகுத்தகடுகள் பத்து நாள்வரை கைதொட முடியாத உஷ்ணத்துடனிருந்தன.

* * *

அமீர் அமானுல்லாகானது சீர்மையான அரசாங்கம் எவ்வகையிலும் சிறந்திருக்கிறது. அந்நாட்டிலுள்ள களவு முதலிய அடாச்செயல்களை யடக்கிக்கொண்டு வருகின்றது.

* * *

சாந்தமகா ஸமுத்திரத்தின்கரையிலுள்ள ஊலிகள் என்னும் மீன்களின் நெய் விளக்கெரிக்க உபயோகமாகிறது. அம்மீனையுலர்த்தி மெழுகுவர்த்தி போலவும் எரிக்கின்றார்கள்.

* * *

ஸன்லைட்சோப் செய்து வரும் கம்பெனிக்குத் தலைவரான லார்டு லெவர்ஹ்யூம் சென்ற உ0 ஆண்டுகட்குள் விளம்பரத்துக்காக மட்டும் ௨,எ0,00,000 பவுன் செலவு செய்திருக்கிறார்.

* * *

ஸ்ரீமதி கமலாதா பானர்ஜி என்னும் இந்தியமாது தான் எழுதிய "கிருஷ்ணராதா" என்னும் நாடகத்தை இங்கிலாந்தில் மாடம் பவோலா என்ற நாடகப் பெண்ணைக் கொண்டு நடத்திக் காட்டினாள்.

* * *

இங்கிலாந்தில் உ-லக்ஷம் பேர்வரை வேலையில்லாமல் திண்டாடும் கஷ்டத்தை யுத்தேசித்து இனிப் பிரஜாவுற்பத்திசெய்யக்கூடாதபடி தடுக்க வேண்டுமென்று நிபுணரான ஸ்ரீமான் வில்லியம் பேல்ரிட்ஜ் சொன்னார்.

* * *

வாஷிங்டனில் கஎஎரு-ஜூலை நஉ ஜார்ஜ் வாஷிங்டன் அவர்கட்கு படைகளுடன் ஒதுங்கி நிற்க இடமாயிருந்து அன்று முதல் பிரசித்தி பெற்ற எல்ம் என்னும் மரம் இப்போது பட்டுப்போய்விட்டது.

* * *

இங்கிலாந்தில் ஒரு பாதிரியார் ஒரு ஆண்டுக்கு முன் காணமற்போன தன் மகனைப்பற்றிக்கண்ட ஒரு நாளையக் கனவின்படியே, ஒரு தோட்டத்துச் சாக்கடைக் குழியிலிருந்து அவனது பிரேதத்தை எடுத்தனர்.

* * *

இலங்கை மாத்தளையில் ஒரு சிங்கள மாதுமீது காலஞ்சென்ற அவளது சிறியதாயார்ஆவேசமாகியிருக்கின்றாள். இப்போது அப்பெண் கேட்ட கேள்விகட்கெல்லாம் பதில் சொல்லுகிறாள்.

* * *

கறுப்பு நிறத்தவர் வெள்ளையர்காதிபத்தியத்தைக் கவிழ்த்துவிடாமலிருக்கும் பொருட்டு ஆங்கிலர் குடும்பங்களையும் யுத்தத் திறமைமையையும்விருத்திசெய்யவேண்டுமென்று வைத்தியர் வாகன் என்னும் ஒரு தத்துவசாஸ்திரி லண்டனிற்சொன்னார்.

* * *

சுயபாஷையில் திருத்தமும் திட்டமும் நாகரிகப் பெருந் தன்மையும் அழகு யோக்கியதை யிவற்றைவளர்ப்பதில் நோக்கமும்நன்கு ஆலோசித்துத் தீர்மானிக்கும் திறமும் சாமர்த்தியமும் கார்ய ஸித்தியாக்கும் சக்தியும் பெற்றிருத்தலே கல்வித் திறமைக்கு அறிகுறிகளென்று அமெரிக்கா சர்வ கலாசாலைத் தலைவர் சொல்லியிருக்கிறார்.

* * *

இலங்கையில் சில சிங்களவர்கள் இரண்டு பேருக்கு ஒரு பெண்ணை மனைவியாக வைத்துக் கொள்ளுகின்றனர். இவ்வழக்கம் முற்காலத்திலில்லையாம். இந்துக்களில் ஒருவனுக்கு இரண்டு பெண்களை மனைவிகளாக்கும் வழக்கம இருந்து கொண்டிருக்கிறது. பெண் ஒரே புருஷனை மணக்க வேண்டியது போல் ஆணும் ஒரு மனைவியை மணக்க வேண்டாமோஎன்று லோகோபாரி சொல்கிறது.

## வைசியநாட்டுச்செய்தி.

### பள்ளத்தூர் விநாயகர் சங்கம்.

நாளிது-மீ அ-உ சங்கத்தில் கூடி, வெ. நா. ராம. வெங்கடாசலம் செட்டியார் அக்கிராசனத்தில் அ. ராம. அள. சுப்பிரமணியன் செட்டியார் "புறங்கூறல்" என்னும் விஷயத்தையும், பெ. ராமனுதன் "சமயசீலே" என்னும் விஷயத்தையும்வெகுஉருக்கமாகப் பேசினார்கள் என்று காரியதரிசி எழுதுகிறார்.

* * *

### வேந்தன்பட்டி.

சம்பாவனை:—இவ்வூர்த் திருவள்ளுவர் வாசகசாலைக்குத் திருவாளர் துக. ராம. மு. இலக்குமணச் செட்டியாரவர்கள் தமது புதல்வி ராமாயிக்கு நடந்த காப்புக்கட்டுப் புதுமையில் ரூ. ரு சம்பாவனை செய்தனுப்பியுள்ளார்கள். அவர்கட்கு நன்றி செலுத்துகிறோம்.

உபந்யாசம்:—இவ் வாசகசாலையின் ந-ம் ஆண்டு சூ-வதுகூட்டம் நாளிதுமீ கடுஉ (க-க0-உந) மாலை ச-உ0-மணிக்கு வாசகசாலைக் காரியதரிசி பழ. ப. பழநியப்ப செட்டியாரவர்கள் தலைமையிற் கூடியது. கடவுள்வாழ்த்துப்பாட தலைவரவர்கள் முகவுரை கூறியபின், சி. ராம. சின்னன்செட்டியார் "புலான் மறுத்தல்" என்பதையும், நா. சோமசுந்தரஞ் செட்டியார் "ஆலய வழிபாடு" என்பதையும் உபந்யசிக்க தலைவரவர்களின் முடிவுரையுடன் ரு-ந0 மணிக்குக் கூட்டம் கலைந்தது.

ஸ்ரீமத்ராமாயணம்:—இவ்வாசகசாலையில் நகரத்தார்களால் நாளிதுமீ கஉஉ முதல் கம்ப ராமாயண வசனம் பஞ்சாங்கம் கண்ணுச்சாமி ஐயரவர்களால் வாசிக்கப்பெற்று நடந்து வருகிறது என்று உபகாரியதரிசி குப. அரு. நடராஜன் எழுதுகிறார்.

---

## இந்தியச் செய்தி.

மகாத்மா காந்தி சிறை சென்று இன்றோடுருகூஎ-நாட்களாகின்றன. வுகை நாட்கள் உ0க.

* * *

மௌலானா ஷவுக்கத் அலி நவம்பர் மாதம் விடுபடுவார்.

* * *

தமது முதுமைப் பருவத்தில் தமக்கு ஆறுதலளிப்பதுபாட்டினந்தானென்று வைத்யர் ஸ்ரீமான் பிரபுல்ல சந்திரராய் கூறுகிறார்.

* * *

மதுரையில் ஒரு பன்றிக்குத் தலை யானைத்தலைபோலவும், முகம் குரங்குபோலவும் ந-அங்குல நீளமுள்ள துதிக்கையும் உடைய குட்டியொன்று பிறந்திருக்கிறதாம்.

* * *

"நவசக்தி" வாரம் மூம்முறைப்பதிப்பு நிகழும் அக்டோபர் மாதம் ககூஉ வெளியாகுமென்று அதின் ஆசிரியர் எழுதுகிறார்.

* * *

சென்ற பக்ஷம் (இரண்டுவாரம்) பம்பாயில் உச-மணி நேரம் விடாமழை பெய்து பல கட்டிடங்கட்குச் சேதமுண்டாயது.

* * *

காகிநாடாவில் கூடும் கிலாபத் மகாநாட்டுக்கு மௌலானா ஷவுகத் அலி தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

* * *

பின்வரப் போகும் நிகழ்ச்சிகளை முற்கூட்டியே அறிந்துகொள்வதில் மனிதனைக் காட்டிலும் மிருகங்கள் அதிகக் கூர்மையுடையனவாக இருக்கின்றன.

* * *

பள்ளத்தூர் ஸ்ரீமான் அ. மு. முருகப்ப செட்டியார் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்தின் பிரதிநிதியாகச் சென்னைச் சட்ட சபைக்குத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர்.

* * *

கல்லிடைக்குறிச்சி பாரத்வாஜ ஆச்ரமத்துக்கு ஸ்ரீமான் பொ. திருகூடசுந்தரம்பிள்ளையின் மூலம் கொழும்பு வியாபாரிகளிடமிருந்து ரூ. க00உ நன்கொடையாக வந்திருக்கின்றதாம்.

* * *

அக்டோபர் முதல் வாரத்திலிருந்து "முன்னேற்றம்" என்னும் பொருள் கொண்ட தொரு ஆங்கிலத்தினசரிப் பத்திரிகை ஸ்ரீமான் தாஸர் அவர்களால் நடத்தப்பெறும்.

* * *

விஜயநகரம் பித்தாபுரம் ஜயப்பூர் போன்ற ஜமீன்தாரிகளை அரசாளும் சுதந்திரமுள்ள ஸமஸ்தானங்களாக்க வேண்டுமென்று வில்லிங்டன்பிரபு இந்தியாமந்திரிக்குச் சிபார்சு செய்திருக்கிறார்.

* * *

சென்னையில் ஸ்திரீகளின் நிர்வாணப் படங்களை இரஹஸ்யமாய் விற்றுக் கொண்டிருந்த சம்பந்த முதலியார் ஊர்க்காவற் கூட்டத்தாரால் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறார்.

* * *

இல்வாழ்க்கையிற் பிரவேசிக்கும் வழக்கம் முப்பது வயதுக்கு மேலாக அநுஷ்டிக்கப்படும் காலந்தான், வீரம் பொருந்திய மக்களைப் பெறக் கூடும் என்று தமிழகம் கூறுகிறது.

* * *

நீலகிரிக் காப்பித்தோட்டங்களிலும் கற்பூரப் பயிர்தொடங்கியிருக்கிறார்கள். ஒரு தோட்டக்காரர் கற்பூரம் இறக்கும் யந்திரச் சாலையொன்றை ஏற்படுத்தியிருக்கிறார்.

* * *

ஹௌராவிலிருந்து கிவுல்என்ற இடத்திற்குப்புகைவண்டியில்புறப்பட்டுச் சென்ற தளபதி கென்னடி என்னும் வெள்ளையரைக் கொலை செய்தவனைக் கண்டு பிடிப்பவர்க்கு உ0,000 ரூபாய் கொடுக்கப்படுமென்று அறிவித்திருக்கின்றனர்.

* * *

மகாத்மா ஆரம்பித்த "யவ்வன இந்தியா" என்னும் ஆங்கிலவாரப் பத்திரிகையைஉஎ-கூ-உநலிருந்து ஸ்ரீமான் ஜார்ஜ் ஜோஸப் நடத்தி வருகிறார். ஸ்ரீமான் ச. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள்ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

* * *

மலையாளத்தில் பிரஸித்திபெற்ற மாயக் கொள்ளைக் காரனான சத்து என்பவன், திருச்சூர் ஊர்க்காவற்கூட்டத்தாரால் பிடிக்கப்பட்டும் காவலாளிகள் தூங்கின சமயம் பார்த்துத் தன்னைப் பூட்டியிருந்த சங்கிலியை யறுத்துக் கொண்டு ஓடி விட்டான்.

* * *

காரைக்குடியில் தற்போது நாடகம் நடத்திவரும் வித்வகான நாடக ஸபையில் புரட்டாதி ககூஉ யன்று நடித்த நாடகத்தில் அரச வேடம் தரித்து வந்த பெண்மணி அணிந்து வந்த உடை முழுதும் கதராகவே இருந்ததென்று சொல்லக் கேட்டு மகிழ்ந்தோம்.

* * *

ஈரோடு தேசபக்தர் ஸ்ரீமான் ராமஸ்வாமி நாயக்கரவர்கள் ஒரு வார காலமாக ஸந்நிபாத ஜுரத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்பது கேட்டு வருந்துகிறோம். விரைவில் அவர்க்குச் சுகமருளும்படி ஈசனை வேண்டுகின்றோம்.

* * *

நமது தேசத்தில் சதைபொட்டி என்னும் ஒரு அற்புத மூலிகையிருக்கிறது. அது பல சதைத் துண்டுகளை பொன்றாகக் கூட்டும் சக்தி பெற்றிருக்கிறது. இதனை பொரு வேடன் அஹஸ்மாத்தாக முதன் முதலில் தெரிந்துகொண்டான்.

* * *

திருவல்லிக்கேணியில் கிருஷ்ணம்மாள் என்னும் ககூ-வயதுடைய பெண்ணொருத்தி சமையலுக்குத் தீமூட்டியபோது, நெருப்பு ஆடைகளில் பற்றிக்கொண்டு எரிந்தபடியால், அயலார் உதவிக்குவருமுன் மூர்ச்சையாய்க் கிடந்து, பின்னர் ஆஸ்பத்திரியில் அன்றிரவு கக-மணிக்கு உயிர் துறந்தனள்.

* * *

வடக்கில் ராம்பாய் பிரதேசக் கலவரத்தில் சம்பந்தப்பட்ட ஸ்ரீ அல்லூரி ராமராஜுவின் பிரதான சிஷர்களில் ஒருவனான சாமல்லு துரை என்பவர் ஊர்க்காவற் கூட்டத்தாரால் கைது செய்யப் பட்டிருக்கிறார். இவரது துர்நடத்தையை விரும்பாத ஸ்ரீ ராமராஜு இவரை விலக்கியோட்டி விட்டாரென்று பத்திரிகை கூறுகிறது.

* * *

கூர்ஜர மாகாணத் தேசிய ஸபையார் மகாத்மாவின் பிறந்த தினக் கொண்டாட்டத்தை அக்டோபர் உஉ முதல் எஉ வரையில் நடத்துகின்றார்கள் எ-தேதியே பொதுக் கூட்டம் கூட்டுவதென்று தீர்மானித்திருக்கிறார்கள். அடிகள் பிறந்த தினமாகிய புரட்டாசி மக நாள் அந்த எ-ம் தேதிதான் வருகிறது.

* * *

மைசூரில் ஒரு தாயார் தன் குழந்தையைத் தொட்டிலிட்டு ஆட்டிக் கொண்டிருந்தபோது, அவளறியாமல் ஒரு தேள், மேலிருந்து விழுந்து குழந்தையைக் கொட்டவே, குழந்தை அலறிய போது, அதனை யறியாத தாயார் பின்னும் வேகமா யாட்டிக்கொண்டிருக்கப் பல இடங்களில் தேள் கொட்டப்பட்டுக்குழந்தை இறந்து போயது. தாயார் பின்னர்க் கண்டு வருந்தினள். தாய்மார்கள் குழந்தைகள் அழும்போது அழுவக்குக் காரணமென்னவென்று நன்கு ஆராய்ந்தறிய வேண்டியது அவசியமாகும்.

நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடிவந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்.

---

## தனவைசிய ஊழியன்.

காரைக்குடி. புரட்டாதிமீ ௧௯-௨

---

## ஆரவார மாயை.

உலகம் பேரிதும் இந்நாள் ஆரவாரமென்னும் மாயையிலகப்பட்டுத் தவிக்கின்றது. எங்கு பார்த்தாலும் ஆரவாரம். எல்லாம் ஆரவாரம். யாண்டும் ஆரவாரக்காரரே மல்கிக் கிடக்கின்றனர். எந்த இயக்கத்திலும் ஆரவாரக்காரரே மலிந்து திரிகிறார். பொருளற்ற பொய்ச்சொற்களை—சிறிது ஆராய்ந்தால் சொற்ப அறிவுடையாரும் ஆதாரமூலம் மறுக்கத் தக்க அபாண்டமான சொற்களை, அலங்கரித்துப்பேசுவோரும் எழுதுவோரும் பெருகிவிட்டனர். எதையேனும் ஒன்றை மனதில் வைத்து, ஏதேதோ தாம் செய்துவிடுவதாகப் பொய்யுரைகளைப் புனைந்து ஜனங்களை யேமாற்றி ஆரவாரஞ் செய்கிறார்.

முற்றும் ஆரவார மயமாகவே கிடந்தபாழும் உலகத்தோடு இயைபுற்று, அவ்வாரவார வழியையே பின்பற்றி, ஆயிரக் கணக்கானவர் கூடுவதும் ஏட்டில் தீர்மானங்களை எழுதிவிட்டுப் போவதும் ஆகிய காரியத்தைச் செய்தல்தாம் தேசாபிமானமென எண்ணிப் பேராரவாரஞ் செய்துக் கொண்டிருந்த இந்திய தேசீய சபையை, ஆரவாரத்தினின்றும் சிறைமீட்டுச் செய்கைக்குக்கொணர்ந்தார் சிறந்த நம்மடிகள். அவரைச் சிறைக்கு அனுப்பிவிட்டு, "இப்பொழுது உணர்ச்சிகுன்றிவிட்டது; ஜனங்களிடை உணர்ச்சியை உண்டாக்குதற்குச் சட்டசபை ஆரவாரத்தை ஆரம்பித்தாலன்றி முடியாது" என்றும் பிற இயையாததும் பொருந்தாப் பொய்யும் பிறவும் வீராட்டகாசத்துடன் புகன்று, பழைய ஆரவாரப் பாதை நண்ணுகின்றார் இந்நாள் சில வீரர். இவ்வாறே யாண்டும். இவர்கட்குக் காரியம் அறியும் அறிவு இல்லையோவெனின், இவர்களுள் அறிஞரும் சிலர் இல்லாதுபோகவில்லை. ஆனால், இவர்கள் செயலை நோக்கினால் அறிஞராகத் தோன்றார். அதற்குத் தக்க காரண முண்டு. இவர்கள் அறிவு புகழாசை—அகங்காரத்தால் விழுங்கப்படுகிறது.

ஆரவார மாயையிலகப்பட்டோர் சாதாரண ஜனங்கட்கு விருப்பம் எதிற்செல்கின்றதோ அவ்வழியே ஓடுவர். ஆரவார மொன்றையே முக்கியமாகக் கொண்டவர்க்கு கொள்கை யிருக்க முடியாது. பொதுஜனங்கள் விரும்புவதெல்லாமவர் கொள்கை. ஆரவாரத்திற்கு விரோதமாக யாரேனும் செய்கை செய்தால் அவர் பாற் பொறாமை. சிலருக்குக் கொள்கையிருந்தாலும் கொள்கையைப் பொறாமை விழுங்கி விடுகிறது. இவர்கள் ஏலாதன புகல அஞ்சுவதில்லை. அது அறிஞராற் கண்டு பிடிக்கப்படுமே என்ற கவலையும் ஆரவாரத்தின்பாற் பட்டோர்க்கு இருப்பதில்லை. அப்பப்பா! இம்மாயை, வலிது! வலிது!!

உதாரணமாக ஒன்று கூறுவோம். டில்லியில் நடந்தேறிய விசேஷ தேசீய மகாநாட்டில் மௌலானா மகமதலி ராஜித்தீர்மானம் என்றுசொல்லுகின்ற ஒரு தீர்மானத்தைக்கொண்டுவந்தார். அத்தீர்மானத்தை ஈண்டு ஆராயப்புகவில்லை. அத்தீர்மானங் கொண்டுவந்த அவர், நமது காந்தியடிகள் கம்பியில்லாத் தந்தி மூலம் சில செய்தி யனுப்பியிருப்பதாகச் சொன்னார். இதன் பொருளென்னை? இதை உண்மையென்று எந்த மூடனும் நம்புவனோ? இதனால் மகமதலியை நாம் இகழ்வதாக யாரும் கருதல்படாது. அவர் கடிதம் வந்ததாகச்சொன்னாரில்லை. அவர் உரையே, அது புனைந்துரையென்பதை நன்கு காட்டுகின்றது. மகாத்மா மனோபாவம் அவ்வாறிருக்குமென்பது மகமதலி கருத்து. இதை அலங்கரித்து அழகு பெற அவர்மொழிந்தார். அதுகொண்டு மகாத்மாவின் மனோபாவம் அதுவென்று எவரும் எண்ண வேண்டுவதின்று. வேறாகவும் இருக்கலாம். இது உண்மைச் செய்தி என ஜனங்கள் கருதும்படி சில பத்திரிகாசிரியர்கள் தங்கள் பத்திரிகைகளில் பெரிய பெரிய எழுத்துக்களில் பொறித்து இதுகொண்டு பேராரவாரஞ் செய்யப் புகுந்து விட்டமை எவ்வளவு விந்தை! இப்படிப் பல. ஆரவாரம் ஒன்றே குறியன்றிப் பிறவற்றைப் பற்றிய எண்ணம் அவர்கட்கு இருப்பதில்லை. ஆரவார மாயை அறிவை மழுக்கும் ஒன்றாகும். ஆரவாரம் புரிவோர் பெரும்பாலும் புகழை விரும்பியே புரிகின்றனர். அவர்கள் புகழ் விரும்பி, முதலில் சிறிது அது கிடைப்பினும் சின்னாளில் பொய்யரென்றும் பிறரென்றும் பேரெடுத்துப் பரிதபிப்பதைக் காட்டினும், என்றும் நின்று நிலவத்தக்க புகழ்க்குரிய செயல் பூண்டொழுகுதல் நலம்.

பொது ஜனங்கள் தங்கள் கடமையைச் சரியாகச் செய்வார்களானால் ஆரவாரக்காரர் தாமே திருந்தி விடுவர். பொது ஜனங்களின் கடமை இந்நாள் மிகவும் பெரிதாகவே யிருக்கிறது. எவர் என்ன எழுதின போதினும் எவர் என்ன பேசின போதினும் எல்லாம் சரி என்று எண்ணி விடாமல் ஒவ்வொரு எழுத்தையும் ஒவ்வொரு பேச்சையும் தம்மறிவு கொண்டு ஆய்ந்து முடிவுக்கு வருவாரானால் யாவும் நன்றேயாகும். "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னும் தேவர் குறள்களை என்றும் நினைவிலிருத்தல் வேண்டும்.

உலகத்தைச் செய்கை மயமாக்க வந்த காந்தியெம்பெருமான் பேரொளி வீசியும், உலகம் செய்கை மயமாகவாகி, ஆரவாரத்தை யகற்றி, ஆரவாரக்காரருக்கு அறிவுறுத்தாவிட்டால் இதற்கு விமோசனந்தான் எப்பொழுது? காந்தியைப் பேசுவதானும் காந்தியை எழுதுவதானும் கதர்க் கட்டுவதானும் மட்டும் பயனின்று. காந்தியின் எண்ணப்படி ஆரவாரத்தை யகற்றி, பொய்யைக் கனவிலுங் கருதாது உறைதல் வேண்டும்.

---



## இடி முழக்கம்.

### மலாய்நாட்டுச் சந்தாதாரர்கட்கு

மலாய்நாட்டுச் சந்தாதாரர்களிடம் நமது பத்திரிகைக்கு ரூபாய் மூவாயிரத்து இருநூறு வரைச் சந்தாப்பாக்கி யிருக்கிறது. சிலரிடம் ஆரம்ப முதலே சந்தா வரவில்லை. வாராவாரம் பத்திரிகைகள் போய்க்கொண்டிருக்கின்றன. சிலர் ஊருக்குத் திரும்பியு மிருக்கலாம். அதற்காக அவர்கள் பத்திரிகை திரும்பி வரவில்லை; மற்றவர் பெற்றுவருகின்றனர். அங்கிருந்து ஊருக்குப் புறப்படுகின்றவர்கள் தெரிவிப்பதுமில்லை. வி. பி. ஏற்பாடு இருக்குமானால் பிற இடங்கள் மாதிரி, உண்டு இல்லையென ஏதேனும் ஆகியிருக்கும். சந்தா முடிந்தவுடன் பத்திரிகையோடு ஒரு துண்டு அனுப்புவதுண்டு. அதை வாங்கி வைத்துக்கொண்டும் வாளாவிருக்கின்றனர். தயவு செய்து மலாய்நாட்டுச் சந்தாதாரர்களில் சந்தாப்பாக்கி யுள்ளவர்கள் நமக்கு வீண் நஷ்டத்தை யுண்டாக்காமல் சந்தாப்பாக்கியை அனுப்பி, நமது பத்திரிகையை என்றும் போல ஆதரிப்பார்களென நம்புகிறோம். விருப்பமில்லாதவர் தாங்கள் செலுத்தவேண்டிய சந்தாப்பாக்கியை அனுப்பித் தெரிவித்து விடுதலே முறையாகும்.

### தமிழ் நாட்டின் தர்மம்.

நமது பழந்தமிழ் நாட்டில் ஒரு பெரியார் திருநாள் கொண்டாடுவதாயின், ஜீவிய காலத்திலேயே விழா நடாத்தப்பெறும் பெரியார் நாளை, அவர் திருநக்ஷத்திரத்திலேயே கொண்டாடுதல் மரபு. இதனையும் மாற்றி, அதினும் ஆங்கிலத் தெய்தியைக் கொண்டாடுதல் எற்றுக்கு? திருநக்ஷத்திரம்தெரியாதபோது கொண்டாடுதல் போகட்டும். தெரிந்த பிறகு ஆங்கிலத் தெய்தியைக் கொண்டாடுதல் பெரும் பேதைமையன்றோ? நமது காந்தியடிகள் பிறந்த நக்ஷத்திரம் புரட்டாதி மகமாகும். இது இருபத்தோராம் நாள் ஞாயிற்றுக்கிழமை வருகிறது. காந்தியடிகள் பிறந்த கூர்ஜரத்தில் இந்நாளை திருநாளாகக் கொண்டாடப் பெறுகிறது. இவ்வைசிய நாட்டில் இத்தெய்தியே கொண்டாடப் பெறப் போகிறதென அறிகிறோம். தமிழ் நாட்டில் அநேகம் நகரங்களில் அக்டோபர் இரண்டாந் தேதி கொண்டாடப் பட்டிருக்கிறது. தமிழ்நாடு எல்லாவற்றுக்கும் ஆங்கிலக் கணக்கிலேயே கிடந்துழலாது தன் மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ளுவது எந்நாளிலோ? நகரங்களிலுறையும் ஆங்கிலம்பயின்ற தமிழ் மக்களி லனேகருக்கு நமது வருஷம் மாதம் நட்சத்திரம் முதலியனவே தெரியாததுதான் இதற்குக் காரணம். எத்தனைதான் ஆங்கிலம் படித்தபோதினும் நமது நாட்டு முறையைப் படித்துக் கொள்ளாது போயின் யாது பயன்? நமது நாட்டிற் பிறந்த பெரியாரின் திருவிழாவை நமது நாட்டுச் சம்பிரதாயப்படி நடத்தி மகிழ்தல்தான் தமிழ் நாட்டின் தர்மம்.

### போய்க்கதர்.

ஈரோட்டில் பொய்க்கதர் மிகுதியும் விற்பனை செய்வதாகச் சில கடிதங்களும் வந்திருக்கின்றன. நேரிலும் சிலர் கூறினர். ஈரோட்டிலிருந்து வரும் ஐந்து முழ, ஆறுமுழ அளவில் கண்ணைக் கவரும் மேல் வேட்டிகள் பல கதரென்று கடைகளில் விற்கப்படுகின்றன. இவைகள் பொய்க்கதரென்றே அறிகிறோம். எந்த ஊர்க் கதரையும் இப்பொழுது நம்ப முடியவில்லை. கதர்க் கட்டும் அன்பர்கள் அழகைப் பாராது நம்பிக்கையான இடத்தில் வாங்குதல் வேண்டும். கூடிய வரையில் தேசீய சபைகளின் ஆதரவில் விற்பனை செய்யப்பெறும் கதர்களை வாங்கலாம். தாங்கள் நேரில் நூற்று நெய்தாலன்றிச் சந்தேகம் ஒழியாது.

### அன்பர் சுகமடைக!

நமது அன்பரும் தமிழ்நாட்டிலுள்ள உண்மைத் தேசபக்தர்கள் ஒரு சிலருள்ஒருவருமாகிய ஈரோடு திரு. இராமசாமி நாயக்கர் தேகத்தைப் பற்றியுள்ள பிணி பஞ்சாய்ப் பறந்து அன்பர் சுகமடைய இறையருள் புரிவதாக!

### தாய்மார்கள் கவனிக்க!

குழந்தையைப்பெறும் தாய்மார்கள் பிள்ளையைப் பெறுதல்தாம் தங்கள் கடமையென எண்ணிவிடல் படாது. வளர்ப்பதிற்றான் பெரிதும் நாட்டஞ் செலுத்துதல் வேண்டும். குழந்தைக்கு நேரும் இடையூறுகளையும் குணத்தையும் தெரிந்து கொள்தல் வேண்டும். தனது குழந்தைப் பருவம் நீங்கு முன்னரே ஒரு குழந்தைக்குத் தாயாகும்மாது, குழந்தைவளர்க்க—அதன் குணமறிய—வேண்டுவ புரிய, எங்ஙனமறிவாள். மைசூரில் தனது அறியாமையினால் ஒரு தாய் தன் குழந்தையைக் கொல்ல ஹேதுவாகவிருந்ததோர் செய்தி ஐந்தாம்பக்க இறுதியில் வந்துளது. குழந்தை அழுவதற்குக் காரணத்தை யறியாது தொட்டிலையாட்டிப் பெற்ற தாய் குழந்தையைக் கொன்றே போட்டாள். நமது பகுதியினும் குழந்தையழுதவுடன் பால்கொடுத்தல் தொட்டிலாட்டுதல் முதலிய காரியங்கள் தாம் சட்டென்று செய்யப்பெறுகிறது. கவனிப்பில்லாது எல்லாம் விளையாட்டுத்தனமாகச் செய்தல் அபாயத்திற்குரிய செயலாகும். குறியறிந்து செய்தல் வேண்டும்.



### இருவருக்கு ஒரு மனைவி.

இலங்கையில் சிங்களவர் சிலருள் இரண்டு ஆடவர் ஒரு பெண்ணை மனைவியாக வாழ்க்கைப்படுத்திக் கொள்ளுகின்றார்களாம். இது அதிசயமான முறைதான். புராதன காலத்தில் பஞ்சபாண்டவர் ஐவர் ஒரு மனைவியை வைத்துக் கொண்டதாகச் சரித்திரத்திற் படிக்கிறோம். ஆனால், அவர்கள் ஒரு சகோதரர்கள். அன்றிச் சில முறைகளும் வைத்துக்கொண்டிருந்தார்களென்றும் கூறப்பட்டிருக்கிறது. இதற்கு முறை எப்படியோ? இது வேடிக்கைதான். ஆனால், ஒரு ஆடவன் இரண்டு பெண்கள் கொண்டால்?

---

# உள்ளூர்ச் செய்தி.

இரங்கூன் உண்டியல் வட்டம் க-௯உ-0
சென்னை உண்டியல் வட்டம் 0-எ-0
சென்னைபுரட்டாதிடைப்புவட்டி0-௯0-௩

## அச்சுக்கூடத் தொழிலாளர் சங்கம்.

நாளிது புரட்டாதிமீ கச, கரு, க௯ தேதிகளில் தனவைசிய ஊழியன் அச்சுக்கூடக் கட்டிடத்தில் மாலை ௬-மணிக்கு மேல் திருவாளர் அரு. சோமசுந்தரச் செட்டியாரவர்களால், முறையே, மநுநீதி கண்ட சோழன், காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார் இம்மூன்று சரித்திரங்களின் புராணப் பிரசங்கங்கள் இனிது நடைபெற்றன என்றும், நிகழும் புரட்டாதிமீ உ௯உ ஞாயிற்றுக்கிழமையன்று மாலை ௩-மணிக்கு மேல் குமரன் அச்சுக்கூடக் கட்டிடத்தில் மகாத்மா காந்தியடிகளின் பிறந்த நாட் கொண்டாட்டம் கொண்டாடப்பெறும். அவ்வமயம் அன்பர்களின் வரவு எதிர்பார்க்கப்படுகிறதென்றும் காரியதரிசிக்காக ஸ்ரீமான் தி. மு. ஆறுமுகம் எழுதுகிறார்.

## சுகாதார அபிவிர்த்தி சங்கம்.

நாளிது புரட்டாதிமீ கக-ம் நாள் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் சங்கத்தின் சார்பாகச் சுகம் என்ற மாதமிருமுறைப்பத்திரிகையொன்று வெளியிடுவதாகத் திர்மானம் செய்திருக்கும் விஷயத்தில் பத்திரிகைக் கமிட்டியாருக்குள் எபொறுப்பையும் அதிகாரத்தையும் நிர்ணயிக்கும் பொருட்டுச் சங்கத்தின் பொதுக்கூட்டமொன்று நாளிதுமீ உஉ-உ திங்கட்கிழமை மாலை

[௩-ம்பக்கத் தொடர்ச்சி.]

இவற்றுடன் திருவரங்கத்தமுதனார் ஸ்ரீ பாஷ்யகாரர் விஷயமாக அருளிச் செய்திருக்கும் இராமாநுஜ நூற்றந்தாதிப்பாசுரங்கள் கO அ-ஐயும் சேர்த்து நாலாயிரமென்று கூறுவாருமுளர். அன்றி, சிறிய திருமடல் எழுபத்தேழரைக் கண்ணிகளையும் பெரிய திருமடல் நூற்றுநாற்பத்தெட்டரைக்கண்ணிகளையும் அக்க ௬எ௬ பாசுரங்களுடன் சேர்த்து, சிறிய திருமடல் பெரிய திருமடல்களை ஒவ்வொன்றாகச் சேர்த்த இரண்டையும் கள்ளிப்பார்க்க நாலாயிரம் முழுத் தொகையாக வருதலை யறியலாம். ஆனால் அவற்றைப் பாசுரமாக எண்ணாமல் கண்ணிகளாகக் கணக்கிடல் வேண்டும்.

௬-௩0 மணிக்கு மேல் காரைக்குடி சிதம்பர அக்கிரகாரத்தில் ஸ்ரீமான் சுப்பிரமணிய ஐயரவர்கள் கிருகத்தில் நடைபெறும் என்று காரியதரிசி வி. வி. ராஜரத்னம் எழுதுகிறார்.

## வாசகசாலை.

இச்சாலையில் நிகழும் புரட்டாதிமீ கஎ௨ மாலை ௬-௩0 மணிக்கு மேல் உரத்தூர் தமிழ் வித்வான் ஸ்ரீமான் கோ. வைத்தியலிங்கப் பிள்ளையவர்கள் "பெரியாரியல்பு" என்னும் அரிய விஷயத்தைப் பற்றியதோர் விரிவுரை நிகழ்த்தினார்கள். பிள்ளையவர்கள் விஷயத்தைப் பாகுபடுத்தி அரிய பெரிய மேற்கோள்களுடன் யாவரும் உணருமாறு செவ்விய நடையில் உபந்யசித்தார்கள். அன்று பிள்ளையவர்கட்குத் தேக அசௌக்யத்தால் சிரமமிருந்தும் உ-மணி நேரம் உபந்யசித்தது அவர்களது அன்பின் மிகுதியையும் கடமையின் மாறுமையையும் நன்கு விளக்கிற்று. அவர்கட்குத் தேகம் சௌக்யப்படும்படி ஈசன் அருள் புரிக வென்று கேட்டுவந்த ஒரு அன்பர் எழுதுகிறார்.

## ஸங்கீத சபை.

நிகழும் புரட்டாதிமீ உகஉ மாலை ச-மணிக்கு இவ்வூர் உயர்தரக் கலாசாலை மேல் மாடியில் அடியிற் கண்ட விபரப்படி ஸங்கீதக் கச்சேரி நடைபெறும். வாய்ப்பாட்டு:—ஸ்ரீமான் (பிளேட்)வெங்கடராமய்யரவர்கள், நாகப்பட்டணம். பிடில்:—ஸ்ரீமான் பொன்னுசாமிப் பிள்ளையவர்கள், இலுப்பூர். மிருதங்கம் —ஸ்ரீமான் வேணுச் செட்டியாரவர்கள், கும்பகோணம். கஞ்சரா:—ஸ்ரீமான் தக்ஷிணாமூர்த்தி பிள்ளையவர்கள், புதுக்கோட்டை. கடம்:—ஸ்ரீமான் சுந்தரமய்யரவர்கள், உமையாள்புரம். மோர்சங்கு:—ஸ்ரீமான் திருவேங்கடமய்யங்காரவர்கள், கொத்தமங்கலம். என்று காரியதரிசி மெ. மெ. கணேசன் செட்டியார் எழுதுகிறார்.

## புதுவயல் தக்ஷிணாமூர்த்தி ஸங்கம்.

இச்சங்கத்தின்மாதக்கூட்டமொன்று நிகழும் புரட்டாதி க௩உ மாலை ௬-௩0-மணிக்கு மேல் காரைக்குடி ஸ்ரீமாந் மோ. வே. கோவிந்தராஜஐயங்காரவர்கள் தலைமையில் கூடிக் கண்டனூர் பிரம்மஸ்ரீ சேஷகிரி சாஸ்திரியாரவர்கள் "ஸ்வதர்மம்" என்னும் விஷயத்தை யுபந்யசிக்கத் தலைவரவர்களின் முடிவுரைக்குப் பின்னர் அ-௩0 மணிக்கு சபை நிறைவெய்

# தந்திச்செய்தி.

## பினங்கு புரட்டாதிமீ கஅஉ

சென்னை உண்டியல் விலை. நூற்று எழுபத்திரண்டு.

ஈயம் விலை நூறு.
ரப்பர் விலை அறுபத்தேழு.

## இரங்கூன் புரட்டாதிமீ கஅஉ

| | |
|---|---|
| இயந்திர அரிசி பெரிது | சச0—0—0 |
| ஷை சிறிது | ச௯0—0—0 |
| படகு நெல் | க௯ரு—0—0 |
| புகைபிரத நெல் | க௯0—0—0 |
| கடலை | உசா0—0—0 |
| துவரை | சஉரு—0—0 |
| கோதுமை | சஎ0—0—0 |
| தட்டைப்பயறு | சருரு—0—0 |
| உழுந்து | ௩௯0—0—0 |
| காராமணி | உஎரு—0—0 |
| பவுன் விலை | கசா—க—௩ |
| தங்கம் | ௩சா—அ—0 |
| வெள்ளி விலை | அரு—0—0 |
| டாலர் | சாசா—க0—0 |
| உண்டியல் | கஎரு—0—0 |
| தவணை வட்டி | 0—௯0—0 |
| நடப்பு வட்டி | 0—க0—சா |

பணம் சம்பல்.

## சென்னை புரட்டாதிமீ கஎஉ

பவுன் ஒன்றுக்கு விலை ரூ. கசா—0—0
வெள்ளிரூபாயெடைக-க்குரூ. 0-க௩-சா

# கப்பற் செய்தி.

தாரா என்ற கப்பல் புரட்டாதி-மீ உ௩-உ சென்னை வந்து உச-உ சிங்கப்பூருக்குப் புறப்படுகிறது.

ராமலிஸ்ஆஜிக் என்றகப்பல் உரு-உ சென்னை வந்து உஎ-உ ரெங்கூனுக்குப் புறப்படுகிறது.

தியது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

## கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டம்.

நிகழும் புரட்டாதிமீ க௩-உ சனிக்கிழமை கார்த்திகையன்று இத்திருக்கூட்டத்தின் அங்கத்தினர் பலரால் சைவசமயந்தழைத்தோங்கவும் முருகபிரானும் அவரன்பர்களும் ஆனந்தபரவசமாகும் பொருட்டும் பலஇன்னிசைக்கருவிகளுடனும் தேவார திருவாசகசிவகுக பஜனையுடனும் இவ்வூர்க்கருகாமையில் மூன்றுமைல் தூரத்திலுள்ள பாலகிரிக்ஷேத்திரமென விளங்கும் வையாபுரியில் கலியுக வரப்பிரசாதியாய் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீஷண்முகநாதன் சன்னிதானத்திற்குச் சென்று பக்தியுடன் தரிசித்துக் கொண்டதும், ஆங்கு வைகும் கூழிபிறை நகர அன்னதான மடத்தில் வந்திருந்த அடியார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்புடன் அன்னமளிக்கப்பெற்றதென்று காரியதரிசி எழுதுகிறார்.



# மணியோசை.

அன்பார்ந்த சகோதரர்களே!

உலகில் மனிதன் மானத்தைக் காப்பாற்ற ஆடை தரிக்க வேண்டியது அவசியமாகிறது. தேசத்தின் சீதோஷ்ணநிலைக்குத் தகுந்தவாறு உடுப்பதே நலமுடையதாகும். நிரம்ப ஆடம்பரமாயணிவது அவ்வளவு பொருத்த முடையதல்ல. இவைகட்கெல்லாம் இயைந்து நிற்பது கதராடைதான் என்பதை நேயர்கட்குச் சொல்லவா வேண்டும்? தற்காலத்தில் கதராடை என்றால் சிலர் கலக்கம் கொள்கின்றனர். இது நமக்கு—நமது ஜாதிக்கு—புதிதான ஆடையா? புராதனமாக பண்டைக்காலமுதலே நமது முன்னோர்கள் அணிந்து வந்ததேயாகும். அவர்கள் நூற்று நெய்த சேலை என்றும் பறையன் கைத்துண்டென்றும், இதற்குப் பெயர் வைத்திருந்தார்கள். பலவாற்றானும் ஒப்புயர்வற்ற மேதாவிகள் என்று இன்றும் மதிக்க வேண்டிய நம் வழிப்பெரியோர்கள் இந்த வேஷ்டியைத்தான் கட்டி வந்தார்கள். இன்றைக்கு முப்பதுவருடங்களுக்கு முன்னர்க்கூட நம்மவர் உடுத்திக் கொண்டதாகச் சொல்கிறார்கள்.

ஆனால், அவர்கள் வழித்தோன்றலாகிய நம்மவரில் ஒரு சிலர் இந்த நூற்று நெய்த வேஷ்டியை—கதராடையை—கட்டப்பிரியப்படாததோடு அமையாது பிறர்உடுத்துவதைப்வேண்டாமென்றும் என்ன இந்த பயித்தியம் உனக்கும் பிடித்து விட்டதென்றும் சொல்கிறார்கள். தமக்குவமை யில்லாத நமது மகாத்மாகாந்தியடிகள் வாக்கினால் வந்த இப்புனித உத்தாரணம் இந்தச் சில மனிதர்கட்குப் பிடிக்கவில்லை போலும்! பாவம்!! நாம் இத்தகையவர்களை நோவதிற் பயனில்லை. இந்த நண்பர்களை சிறிது நன்றாக யோஜித்துப் பார்த்து மனச்சாட்சிக்கு விரோதமில்லாது நடக்கும்படி சொல்வோம். வேறு மறைந்தொழுகும் கார்யங்கள் பல செய்து அநேகர்கெட்டுவிடுவதைக் கண்டு இவர்கள் பரிதாபப்படாது, கதராடையென்றால் தீய ஒழுக்கங்கள் எல்லாம் பறந்தோடும் இந்நற்செயலைக்கண்டு ஏன் மருளுகிறார்கள்? முன்னைத் தீ வினைப் பயன்கள் இவர்களிடம் இன்னும் மூளாதழிந்திடுதல் வேண்டுமென்று எம்பெருமானை இறைஞ்சுவோம். இவ்விஷயத்தை எடுத்து இவர்களுக்கு இனிமையாகச் சொல்வோம். ஆசையை அறுத்தெறிவதற்கு இவ்வாடையைப்போன்று பிறிதொன்றுமில்லையென்று சொல்லலாம். ஆடம்பரமாக ஆடை அணிந்தால் மனதில் ஒருவித புற இன்ப உத்ஸாகம் தோன்றித் தீய ஒழுக்கத்தில் படக் காரணமாக இருக்கிறது. இதை விரிக்கிற் பெருகும். ஊகித்துணர்க. அயல்நாட்டு ஜரிகைத் துப்பட்டாவும், உள்நாட்டு ஜரிகைத்துப்பட்டாவும் வாங்கினால் எவ்வளவு ரூபாய் செலவழிகிறது. இக்கதராடையோவெனில் மிகச்சொற்பச் செலவே செலலும். மற்ற வேட்டிகளைப் போலாது துவைத்தால் உடனே அழுக்குப்போய்விடும். மற்றும், இவ்வாடை நம் தேசத்துச் சகோதர ஜனங்களால் நூற்று நெய்யப்பெறுகிறது. ஏழை மக்களுக்கு ஜீவனம் நடைபெறுகிறபுண்ணியத்தையும் நாம் பெறுகிறோம். தர்மம் செய்வதுதானே நமது ஜாதியின் நோக்கம். அப்படியாயின், இது ஒரு சிறந்த தர்மமல்லவா? நாலுரூபாவுக்குக் கதர்வேஷ்டி வாங்கினால் பூராப்பணமும் இந்த ஏழை ஜனங்களுக்கு போய்ச்சேருகிறது. இன்னும் சுயராஜ்யத்திற்கு இதொரு வழியென்று அறிஞர்களெல்லாம் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அப்படியாயின் வேறு வழியாகத் தேசத்திற்கு உதவி செய்ய முடியாமலிருப்பவர்களுக்கும் இக்கதராடை உடுத்துவதே சிறந்ததாக முன்னிற்கிறதைக் குறிப்பிட விரும்புகிறேன். மெல்லியதான வேஷ்டியாக இருந்தால் கட்டிக் கொள்ளலாமென்று சில அன்பர்கள் சொல்கிறார்கள். அழகான ஆடையை எல்லாம் தூர எறிந்துவிட்டு இவ்வாடை கட்ட வேண்டியதன் அவசியத்தை யுன்னும்போது சிறிது முரடானதாயிருந்தாலும் கட்டிக்கொள்ளலாமன்றோ? மற்றும் ஒவ்வொரு ஊரிலும் கதர் உற்பத்தி செய்யாததால் இயந்திர நூல் கலந்து—அல்லது இயந்திர நூலையே—நெய்து விற்கும் வியாபாரிகளும் நம் நாட்டிலிருக்கிறார்களாகையால், உண்மையான கதர் வேட்டியையே வாங்க முயன்று சிறிது கனமாயிருந்தாலும் அணிந்து கொள்ளத்தான் வேண்டும். வாசகர்களுக்கு என் வெற்றுரையைக் கொடுத்து நேரத்தைப்போக்க யான் எண்ணவில்லை. இப்புனித ஆடையைப் பற்றி நீங்கள் எவ்வளவோ அறிந்திருப்பீர்கள். ஆனால், அடிக்கடி நண்பர்களுக்கு ஞாபகமூட்ட வேண்டுவது என்னுடைய கடமையென்றெண்ணி இதை எழுதுகிறேன். அஃதே போன்று உங்கள் கடமையை உங்கள் சிநேகிதர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டுகிறேன்.

தீபாவளிப்பண்டிகை சமீபத்தில் வரப் போகிறது. அன்றையத் தினம் மங்கள ஸ்நானம் செய்த பின்னர் மனத்தழுக்கைப் போக்கும் இம்மாசற்ற உடையையே அணியும்படி இந்நாட்டிலுள்ள—இலங்கை பர்மா மலாய் நாட்டிலுள்ள எனது சகோதரர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். பர்மா மலாய் நாட்டிற்கு ஏராளமான கதர் சென்றிருப்பதாக அறிகிறேன். இதை ஒரு முக்ய விஷயமாக மனதிற் கொண்டு, உடம்பில் எனது ஜாதிய இரத்தம் ஓடும் ஒவ்வொருவரும் வாங்கியணியுமாறு கோருகிறேன். இன்னும் ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். இதற்குமுன் அயல்நாட்டு உடையும், கதருடையும், கலந்து உடுத்துகிறவர்களும் தீபாவளி புண்ய தினத்தில் கதர் அணிபவர்களும், இனி எப்பொழுதுமே கதர்கட்டிக் கொள்வதென்ற நிச்சயம் செய்து விரதமெடுத்துக்கொண்டு அநுட்டிப்பார்களாக.

இந்தச் சமயத்தில் நமது பெண்மணிகளையும் இவ்வாடைஉடுத்தும்படிச் செய்ய நாம் மறந்துவிடக் கூடாது. அளவிறந்த ஆசைக்குத் தங்குமிடமாக விளங்கும் நமது வனிதையர்கள் இதை ஒரு பொருட்டாக எண்ணமாட்டார்களெனினும், இதமாகச்சொல்லித் திருத்த வேண்டிய தவசியமாயிருக்கிறது. சுதினங்களில் இதைக்கட்டுவது புண்யமென்பதை அவர்கட்கு எடுத்துக் காட்டவேண்டும்.

ஆசையை நீக்கி ஆனந்தமடைய அருகதையுள்ள புண்யக்கதராடையை அனைவரும் அணிந்து இன்ப வாழ்வடைவோமாக.

பிச. சுப்பிரமணியன்
அமராவதிபுதூர்.

# நோட்டீஸ்.

க௯உ௩-ஞு செப்டம்பர்-மீ கஉ-உ புதன்கிழமை மாலை ரு-௩0 மணிக்கு க. புதுவயல் வண்டிப் பேட்டையில் அறந்தாங்கி வண்டிக்காரன் யென்னுடைய லெதற்பாக்ஸையும் அதனுள் அடங்கிய ரிகார்டு வகையறாவையும் தவறவிட்டுவிட்டான். அதில் முக்யமானது எனக்கு சித்தியாவான் அ. க. சோம. கடையில் துன்மதிஞு ஆவணிமீ உஉ-உ பினங்கு வட்டிக்கு மேல் வெயன் வீசம் கூட மூன்று மாத தவணைக்கு வெள்ளி கசா00-க்கு எழுதித் தன் கையெழுத்துக்கடதாசி. ஷை காரியத்தைக் கண்டுபிடித்துக் கொடுப்பவர்களுக்கு அதன் மூலம் ஏற்படும் செலவு கொடுக்கப்படும்.

சு. பெரி. முத்தய்யா செட்டியார்
அலகாபுரி.

# ஹாஸ்யப் பகுதி.

---

மனைவி:—எல்லோரும் சீட்டுப் போட்டுப் பணம் சம்பாதித்து நகை பண்ணிக் கொள்ளுகிறார்களே. நீங்களும் அவ்விதம் சீட்டுப் போடக் கூடாதா?

கணவன்:—எதிர் வீட்டில் தினந்தோறும் சென்று சீட்டுப் போட்டுப் பார்த்ததில் பணம் செலவாகிப் பகைதான் பண்ணிக்கொண்டிருக்கிறேனென்பது உனக்குத் தெரியாததா?

* * *

மாதவன்:—கட்டணம் கூலி முதலானவை கொடுக்காமல் உண்ணும் உணவுடனும் படுக்கை தலையணையுடனும் விளையாடும் சாமான்களுடனும் வசிக்கும் வசதிகளுடனும் கட்டை வண்டி யாத்திரை புகைவண்டி யாத்திரை கப்பல் யாத்திரை செய்யும்பிராணி யெது?

கோபாலன்:—வீட்டில் மனைவி குழந்தைகள் இல்லாத போதும் இருக்கும் போதும் நம்மோடு படுக்கையில் உடுக்கையில் கொஞ்சிக் குலாவிப் பார்த்தால் பாய்ந்தோடுவதும் தொட்டால் தேய்ந்தழிவதும் எது?

* * *

புதிய ஊரில் பெருங் கூட்டத்தில் அரும் பெரும் விஷயத்தை எடுத்துக் கொண்ட ஒரு பிரஸங்கியார், இடையிடையே பற்பல அகார உகாரங்களுடன் கால்மணி நேரம் பிரஸங்கித்து விட்டுச் சபையோரைப்பார்த்து,

உபந்யாசகர்: — சபையோர்களே! இவ்வளவு நீண்ட காலம் என் பிரஸங்கத்தைப் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்த உங்கட்கு வந்தனமளிக்கின்றேன். நேரமாயிற்று; இன்னும் உங்கட்குச் சிரமம் கொடாமல் இத்துடன் என் பிரசங்கத்தை நிறுத்திக் கொள்கிறேன்.

சபையில் ஒருவர்: — இல்லை; இல்லை. கால் மணிதானாயிற்று; மழையும் பெய்து கொண்டிருக்கிறது. மேலும் நடக்கலாம்.

உபந்யாசகர்:—(விழித்தார்.)

எல்லோரும்:-(குலுங்கநகைத்தார்கள்.)

* * *

கணவன்:—என்ன இன்றைக்குத் தடபுடலாக வடையும் பாயஸமுமாக விருந்து செய்திருக்கிறாய்?

மனைவி:—அடிக்கடி நம் வீட்டுக்கு வராத தங்களது தம்பியார் இன்றைக்கு வந்திருக்கிறாரே என்றுதான்.

கணவன்:—என்ன என்ன! விருந்தா!! சாகக் கிடத்திய கொடு நோயால் அவஸ்தைப்பட்டு, நல்ல வைத்தியம் செய்துக் கொள்ள நம்வீட்டுக்கு வந்திருக்கிறான்; இப்போதுதான் வைத்தியர் வந்து, வியாதிகடுமை; வெகு ஜாக்ரதையாய்ப் பத்தியத்துடன் இருத்தல் வேண்டுமென்று சொல்லிப் போனாரே! அவனுக்கு விருந்தா!!

மனைவி: — நன்றாயிருக்கிறது. அதெல்லாம் எனக்கும் தெரியும். இருந்தாலும் நமது கடமையை நாம் செய்யவேண்டாமா? அருமையாய் வந்தவர்க்கு ௩ நாட்களாகிலும் விருந்து செய்திடாமற் போனால் அண்டையயல் தூற்றாரோ?

* * *

முதலாமவர்:—இவ்வளவு நீர் நிறைந்த இந்தக் குளம் தீப்பற்றி எரிந்து விட்டால் இதிலுள்ள மீன்களெல்லாம் என்ன செய்யும்?

இரண்டாமவர்:— இதுவும் ஒரு கேள்வியா? எல்லா மீன்களும் கரையிலிருக்கும் மரங்களில் ஏறிக் கொள்ளும்.

மூன்றமவர்: — ஹி ஹி ஹி. நன்றாய்ச் சொன்னீர்கள் ஆலோசித்துப் பாராமல்; அவைகளென்ன மாடுகளா மரங்களில் ஏறிக் கொள்வதற்கு?

அன்னியர்:—(வழியே போய்க் கொண்டிருந்தவர்) நீங்கள் மூவரும் சட்ட ஸபை யங்கத்தினர்களோ?

மூவரும்:—ஆமாம்; நீங்கள் எப்படிக் கண்டு கொண்டீர்கள்?











## நோட்டீஸ்.

சிவகெங்கை சப்கோர்ட்டில்

௧௯உ௩-ஷூ O. S. நெ. ௩௧.

காரைக்குடி ஆ. சி. வீரப்பன் (மைனர்)—வாதி.

அநீத்தசிநேகிதி ஆ.சி. விசாலாக்ஷி

சிவ. அ. சிவ. ரெங்கனாதன் செட்டியார் என்றகுமரப்ப செட்டியார் வகையரா 7 பேர்கள்—பிரதிவாதிகள்.

7-வது பிரதிவாதி காரைக்குடி சிவ. அ. சிவ. சிவராமன் செட்டியார்மகன் சிவ. அ. சீனிவாசன் செட்டியாருக்கு அறிவிக்கிறதாவது:—

வாதியின் தகப்பனார் லேட் ஆசி சின்னய்யா அம்பலக்காரருக்கு க-வது பிரதிவாதியால் ரூ. எ000-க்கு உக-௩-௧௯௧௩ல் எழுதிக்கொடுக்கப்பட்ட அடமானப் பத்திரத்தின் பேரில் வட்டியுள்பட ரூபாய் உ0ருஉசு-0-0-க்கு ஷை கோர்ட்டில் வாதியால் பிரதிவாதிகள் பேரில் வியாஜ்யம் செய்யப்பட்டு ௬எ—௧0—உ௩-உ வாய்தா ஏற்பட்டிருப்பதால் ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதி ஆஜராகி தெரியப்படுத்திக்கொள்ளவும். தவறினால் ஒருதலை பக்ஷமாகத் தீர்மானிக்கலாகுமென்று அறியவும்.

எம். ஜி. முகுந்தராஜா.
சிவகெங்கை, உஎ-சு-௧௯உ௩ | வாதி வக்கீல்.

## தனவைசிய ஊழியன்

### சந்தா விபரம்.

| | | |
|---|---|---|
| உள் நாட்டிற்கு வருஷ சந்தா | ரூ. | ௫. |
| வெளிநாடுகட்கு | ரூ. | சு. |
| தனிப்பிரதி | அணா. | உ. |

### விளம்பர விபரம்.

| | | |
|---|---|---|
| மாதம் ஒன்றுக்குப் பத்தி க-க்கு | ரூ. | உO. |
| ஷெ பத்தி அரைக்கு | ரூ. | கக. |
| ஷெ கால் பத்திக்கு | ரூ. | சு. |
| ஷெ அங்குலம் ஒன்றுக்கு | ரூ. | உ. |

மூன்று மாதங்கள் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி ஒன்றுக்கு ரூ. கஎ-ஆகவும் அரைப்பத்திக்கு ரூ. கூ-ஆகவும், கால் பத்திக்கு ரூ. ரு-ஆகவும் போடப்படும்.

ஆறு மாதங்களும் அதற்கதிகமாகவும் விளம்பரஞ் செய்வோர்க்கு மாதம் ஒன்றுக்கு பத்தி க-க்கு ரூ. கரு-வீதமும் அரைப் பத்திக்கு ரூ. அ-வீதமும், கால் பத்திக்கு ரூ. ச-வீதமும் போடப்படும்.

ஒருபக்கம் விளம்பரஞ் செய்ய க-மாதத்திற்கு ரூ. ருO.

ஷெ ஒரு வாரத்திற்கு ரூ. கரு.

குறிப்பு:—இது கண்டிப்பான ஏற்பாடாகும். இதினின்றும் யாரும் எழுதித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. விளம்பரஞ் செய்வோர் பூராத்தொகையும் முன் பணமாக அனுப்பி விடுதல் வேண்டும். நீண்ட கால விளம்பரஞ் செய்வோர் மூன்று மாதப் பணத்திற்குக் குறையாமல் முன்பணமனுப்பிவைக்க வேண்டும், முன்பணமில்லாத போது விளம்பரம் நிறுத்தி விடப்படும்,

காரியஸ்தர்,

"தனவைசிய ஊழியன்" ஆலயம்,

காரைக்குடி.



ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரம் செய்யப்பெற்றது.

